உ

சிவமயம்

# பரம்ஹம்ஸோபநிடதம்

—:(o):—

ஒரு- ரூ.

இஃது

சுக்லயஜுர்வேதத்தின் ஓர்சாலகையில் உள்ளது.

மூலபாடம் பொழிப்புரை

விசேஷவுரையுடன்

---

சிதம்பரம் பிரம்மவித்தியா பத்திராதிபர்

பரசமய பஞ்சானன பண்டித பாஞ்சஜன்ய

பிரம்மஸ்ரீ

கு, ஸ்ரீநிவாசதீக்ஷிதரவர்களால்

—()*()—

வடமொழியிலியற்றப்பட்ட

ஹம்ஸத்தொனி

என்னும்வியாக்கியானத்துக்கிணங்க

அவர்களாலேயே மொழிபெயர்க்கப்பட்டு

தமது

(நடுக்காவேரி) ஜகத்குருயந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

1899 ௵

---

# பரமஹம்ஸோபநிடத் முகவுரை.

---

இப்பரமஹம்ஸோபநிடதமென்பது சுக்கில யஜுர்வேதத்தின் ஓர் சாகையிலுள்ளது. இது சிவபுராணம் ஸ்காந்தம் முதலியவற்றில் குறித்தபடி பரமஹம்ஸர்களுக்குரிய சிலஆத்மதருமங்களை நிரூபிக்கின்றது. யாம் முன்னர் ஹம்ஸோபநிடதத்தின் முகவுரையிற் குறித்தபடி ஹம்ஸோபநிடதங்களின் வேற்றுமையறியவேண்டுவதற்காகவே இதற்குப்பரமவடை கொடுத்தாரென்க. இதனிடத்து அற்புதமான பரமஹம்ஸதருமங்களில் சிறந்த இந்திரிய நிக்கிரஹம் குறிக்கப்பட்டது எவ்விதத்தும் அவ்வாச்சிரமிகளுக்கு சொரூபானுசந்தானமன்றி வேறு எத்தொழிலும் கூடாதென்பதும் நிரூபிக்கப்பட்டது- அன்றி பல்வகை அறிவுகளும் அவற்றின் நிலைமையும் அவற்றை விலக்கும் வழியும் ஆத்மஞானத்தின் பெருமையும் அதன் பயனும் ஒருவாறு சுருக்கி இதனிடத்தில் காட்டப்பட்டது. ஆகையால் இவ்வுபநிடதம் பரமபாவன பரமஹம்ஸசன்னிபாசிகளுக்கு மிக்க உபயோகமுள்ளது. இதற்கெம்மால் வடமொழியிலியற்றப்பட்ட பரமஹம்ஸோபநிடதவியாக்கியான மென்ற உரைக்கிணங்க தமிழிலும் ஒருரையிட்டோம். இதனை ஏற்றுப்பரமஹம்ஸர் எம்மை ஆசிர்வதிப்பாரென எதிர்பார்க்கிறோம்.

இங்ஙனம்

கிரந்தக்கர்த்தர்.

# പരമഹംസോപനിഷത്പാരായണപാഠഃ

പരിത്യജ്യ അദ്വൈതേ പരമേ സ്ഥിതിഃ | ജ്ഞാനദണ്ഡോ ധൃതോ യേന ഏകദണ്ഡീ സ ഉച്യതേ || കാഷ്ഠദണ്ഡോ ധൃതോ യേന സർവ്വാശീ ജ്ഞാനവർജ്ജിതഃ | തിതിക്ഷാജ്ഞാനവൈരാഗ്യശമാദിഗുണവർജ്ജിതഃ || ഭിക്ഷാമാത്രേണ യോ ജീവേത്സ പാപീ യതിവൃത്തിഹാ | സ യാതി നരകാൻ ഘോരാൻ മഹാരൗരവസംജ്ഞിതാൻ || ഇദന്തരം ജ്ഞാത്വാ സ പരമഹംസ ആശാംബരോ ന നമസ്കാരോ ന സ്വാഹാകാരോ ന സ്വധാകാരോ ന നിന്ദാസ്തുതിഃ യാദൃച്ഛികോ ഭവേത് | ഭിക്ഷുഃ നാവാഹനം ന വിസർജ്ജനം ന മന്ത്രം ന ധ്യാനം നോപാസനം ച ന ലക്ഷ്യം നാലക്ഷ്യം ന പൃഥക് നാപൃഥക് ന ത്വം നാഹം ന സർവ്വം ചാനികേതസ്ഥിതിരേവം സ ഭിക്ഷുഃ സൗവർണ്ണാദീനാം നൈവ പരിഗ്രഹേത് | ന ലോകനം നാവലോകനം ച ന ബാധകഃ ക ഇതി ചേദ്ബാധകോഽസ്ത്യേവ | യസ്മാദ്ഭിക്ഷുർഹിരണ്യം രസേന ദൃഷ്ടം ചേത്സ ബ്രഹ്മഹാ ഭവേത് | യസ്മാദ്ഭിക്ഷുർഹിരണ്യം രസേന സ്പൃഷ്ടം ചേത്സ പൗൽക്കസോ ഭവേത് | യസ്മാദ്ഭിക്ഷുർഹിരണ്യം രസേന ഗ്രാഹ്യം ചേത്സ ആത്മഹാ ഭവേത്തസ്മാദ്ഭിക്ഷുർഹിരണ്യം രസേന ന ദൃഷ്ടം ച ന സ്പൃഷ്ടം ച ന ഗ്രാഹ്യം ച സർവ്വേ കാമാ മനോഗതാ വ്യാവർത്തന്തേ ദുഃഖേ നോദ്വിഗ്നഃ സുഖേ നിഃസ്പൃഹസ്ത്യാഗോ രാഗേ സർവ്വത്ര ശുഭാശുഭയോരനഭിസ്നേഹോ ന ദ്വേഷ്ടി ന മോദം ച സർവ്വേഷാമിന്ദ്രിയാണാം ഗതിരുപരമതേ യ ആത്മന്യേവാവസ്ഥീയതേ | തത്പൂർണ്ണാനന്ദൈകബോധസ്തദ്ബ്രഹ്മാഹമസ്മീതി കൃതകൃത്യോ ഭവതി കൃതകൃത്യോ ഭവതീത്യുപനിഷത് ||

ഓം പൂർണ്ണമദ ഇതി ശാന്തിഃ ||

ഇതി പരമഹംസോപനിഷത് സമാപ്താ ||

॥ ശിവാഞ്ഛ്രാണഃ ॥

# பரமஹம்ஸோபநிடதவுரை.

## அவதரணிகை

இனிகுருசிஷ்யசம்வாதவியாஜத்தால் பரமஹம்ஸதருமங்களை நிரூபித்தருள்வாளாய் வேதநாயகி தோன்றுவழி இது.

അഥയോഗിനാം പരമഹംസാനാം
കോഽയം മാർഗസ്തേഷാം കാ സ്ഥിതിരിതി
നാരദോ ഭഗവന്തമുപഗത്വോവാച — எ—று

(இ—ள்) இனி யோகிகளான பரமஹம்ஸர்களுக்கு எந்தமார்க்கம் எந்த ஸ்திதி என்று நாரதர் பகவானைவழிபட்டுகேட்டார். எ—து

(வி—ரை) "இனி" என்ற சொல்முறைப்படி அடுத்ததென்ற பொருளிலும் ஆரம்பப்பொருளிலும் மங்களபொருளிலும் அமைக்கக்கூடியது. நாரதர்=இவர் பிரமதேவனுடைய குமாரர். பகவானை என்றது பிமதேவனை. இவர் பரமஹம்ஸபரிவ்ராஜக உபநிடதத்தில் ஸ்ரீமந்நாராயணனிடத்தில் பரஹம்ஸசன்னியாசிகளின் தருமங்களைக்கற்றுக்கொண்டமாறுக்கரெனக்குறிக்கப்பட்டமையால் நாரதர் அவர் புத்திரராதலால் தமது பிதாவிடத்துதாம் கற்றதோர் நல்வித்தையை இவ்விடத்து தம் புதல்வருக்குபதேசித்தல் ஆன்றோர்வழக்கமாதலின் புத்திரனல்லாதார்க்கும்சீடனல்லாதார்க்கும் தத்துவத்தையுபதேசியற்க எனசுருதிகூறிய விதி இவரிடத்து முரணாது என்க. ஆதலாற்றான் நாரதபரிவ்ராஜக உபநிடத்தில் இந்நாரதரே சௌனகாதி முனிவர்களுக்கு சன்னியாசதத்துவத்தை உபதேசித்தாரெனக் குறிக்கப்படுகின்றது. ஆகவே பரமஹம்ஸபரிவ்ராஜகம, பரமஹம்ஸம் நாரதபரிவராஜகம் இவை முறையே பிரமநாராயணசம்வாதம் நாரதபிரமசம்வாதம்

சௌனகாதிநாரதசம்வாதமென்று அமைக்கப்பட்டு ஆதிநாராய ணன் முதல் சௌனகர்வரை பரமஹம்ஸசந்நியாசவித்தை வந் த வழியைக் குறித்தனராம். வழிபட்டு = சீடன் ஆசிரியரிடத்துச்செ லுத்தவேண்டியகடமைகளை முறைப்படி செலுத்தி. கேட்டார் = கேட்கும் முறைபற்றி சிரத்தைபக்திகளுடன் ஏற்றார். எங்ஙனமெ ன வினவினின் கூறுகின்றார் யோகிகளான என்பதாதியால். யோகிகள் = யோகீ த்ரிவிதோ ஜ்ஞேய: யோகிமூவகையுள்ளா னென அறியவேண்டும் என்று கூர்மபுராணம் கூறியவாறு அபரோ க்ஷஞானசாதனமான ராஜயோகத்தைக் கைக்கொண்டவரே இவ ராகையால் இவ்வியோகி என்ற விடத்துள்ள உடைமைகுறிக்கும் தத்தித விகுதியான இன் என்பது மாலி குணி முதலிய விடத்துள்ள துபோல உடைமையுடன் பெருமையும் சேர்த்துணர்த்துமெனக். ஆகவே யோகிகளில் அமைந்த மூவகைகளுள் சிறந்த அத்தியாச் சிரமயோகத்தைப் பெற்றவர் இதன் பொருள். இங்கு யோகியெ ன்றவடையை பரமஹம்ஸருக்குச் சேர்த்தமையால் பரமஹம்ஸர ல்லாத வானப்பிரஸ்தர் முதலிய யோகிகளுக்கு இஃது பொருந்தா தென்றேயாமெனக். இனிக் கேள்வியின் விஷயத்தைக் குறிக்கின் றார். எந்தமார்க்கம் = எவ்விதமான வழிபாடு. எந்தஸ்திதி = எவ் வித ஆசாரம் எவ்விதநிஷ்டை. ஆகவே பரமஹம்ஸர் எவ்வித சம்பிரதாயத்தைக் கொண்டொழுகி எப்பயனைப் பெறவேண்டு மென்பதாயிற்று.

## அவதாரிகை

இனி பகவான் உபதேசிக்கும் முறையைக் கூறுகின்றார்.

ஸ ஹோவாச பகவாந் நாராயணோ யோ(அ)யம் பரமஹம்ஸமார்கோ லோ
கே துர்லபதரோ ந து பாஹுல்யோ ய
த்யேகோ பவதி ஸ ஏவ நித்யபூத
ஸ்த: ஸ ஏவ வேதபுருஷ இதி விதுஷோ மந்யந்தே
மஹாபுருஷோ யச்சித்தம் தத்ஸதா மய்யேவா
வதிஷ்டதே தஸ்மாதஹம் ச தஸ்மிந்நேவாவஸ்தீய
தே.

(௨ — து)

(இ—ள்) அவனைப்பார்த்து பகவான் உபதேசித்தார் ஏதோ அது லோகத்தில் மிகவும் துர்லபம் அது விரிவாய் இராது ஒருவன் இருக்கலாம். அவனே நித்தியபாவனத்துள்ளவன் அவனே வேதபுருஷன் என்று அறிஞர்சொல்லுவர் மஹாபுருஷன் அவனது சித்தம் என்றும் என்னிடத்தே இருக்கும் ஆகையால் நானும் அவனிடத்தே இருப்பேன். எ-று.

(வி—ரை) பகவான் தாமுபதேசிக்கக்கருதிய உத்தமமார்க்கமான பரமஹம்ஸமார்க்கத்தைச்சிறப்பிக்கின்றார். ஏதோ = யான் உனக்குபதேசிக்கக்கருதியது. அத்தியந்ததுர்லபம் = அரிதிலும் அரிது. பரமஹம்ஸமார்க்கம் = பரமஹம்ஸஸம்பிரதாயம். விரிவாய் இராது = எங்கும்நிறைந்து இராது. ஒருவன் இருக்கலாம் = எங்கோ சிறிதேஇருக்கலாம். அவனே = அம்மார்க்கமுடையவனே; நித்திய பாவனத்துள்ளவன் = என்றும் பரிசுத்தமார்க்கத்துள்ளவன். இங்ஙனம் சொன்னமையால் இச்சம்பிரதாயம் ஒன்று ஒழியமற்றவை அநேகமாய் சிலவிடத்தாவது அபுண்ணிய சம்பந்தமுள்ளதாய் இருக்குமென்பது குறிக்கப்பட்டது. ஆதலால் ஸர்வபூதங்களுக்கும் அபயப்பிராதானஞ்செய்யும் சன்னியாசம் அப்பரமஹம்ஸாசிரமத்திற்றான் பூர்த்தியடையுமாம். மேலும் அப்பரமஹம்ஸாச்சிரமியை யேபுகழ்கின்றார் அவனே வேதபுருஷனென்று. அறிவுள்ளபுருஷனென்பது அதன்கருத்து. புருஷன்பரிபூரணன் ———— ———— விஜ்ஞாயதே = பூரணனாதலால் புருஷனெனப்படுவான். என்றுவாதூலமாமுனிவர் கூறினரென்க. என்று அறிஞர்சொல்லுவர் = பரமஹம்ஸதருமமீதெனத் தெளிந்தபெரியோர் அப்புருடனைப்புகழ்வார்; மஹாபுருடன் = புருடர்களுக்குள் பெரியவன் அதற்குகாரணங்கூறுகின்றார் அவனது சித்தமென்பதாதியால். சித்தம் = மனம் என்னிடம் நானென்று அனுபவிக்கப்படும் ஆன்மசுவரூபத்தில் அல்லது தானேஎனப்பாவிக்கப்பட்ட சகுணசுவரூபனான என்னிடத்து அவன் என்றும் ஆத்மநிஷ்டனென்று இதனாற்சொல்லப்பட்டது. நான் அவனிடத்தே இருப்பேன் சவிசேஷப்பிரம்மசுவரூபமாகிய நானும் அவனிடத்தே இருப்பதென்றால் அவ்விதமஹானிடத்து என்றும் சன்னிதானம் செய்வேன் என்பது பொருள். பரமஹம்ஸஸன்னியாஸிகளிடத்து பிரமாதிதே

வர்கள் = பிரமாதிகளிடத்து அவர்சித்தவிருத்தியும் நிலைபெறுமாம் என்பதாயிற்று.

## அவதரணிகை

*இனி அவனது இலக்கணத்தைக் குறிக்கின்றார்.*

ஸபுத்ரமித்ரகலத்ரபந்த்வாதீந் ஶி
காம் யஜ்ஞோபவீதம் ஸ்வாத்யாயம் ச ஸர்வக
ர்மாணி ஸந்ந்யஸ்யாயம் ப்ரஹ்மாண்டம் ச ஹித்வா
கௌபீநம் தண்டமாச்சாதநம் ச ஸ்வஶரீரோ
பபோகார்தாய லோகஸ்யோபகாரார்தா
ய ச பரிக்ரஹேத் ‖ எ—து

(இ—ள்) இவன் தன் புத்திரர் மித்திரர் களத்திரம் பந்துக்கள் முதலியவரையும் சிகை யக்ஞோபவீதம் வேதம் சர்வகர்மங்கள் இவைகளையும் விட்டு சுபமார்க்கத்தையும் பிரமாண்டத்தையும் துலைத்து கௌபீனம் தண்டம் ஓர் வஸ்திரம் இவற்றை தன் சரீரத்தின் போகத்திற்காகவும் லோகத்தின் உபகாரத்திற்கேயாகவும் பெற்றுக்கொள்ளுவான்.

(வி—ரை,) இவன் = பரமஹம்ஸனாக விரும்புவோன். புத்திரர் = ஔரசன், தத்தன், முதலியோர். பந்து முதலியோர் என்றவிடத்து முதலியோர் என்ற சொல்லால் சத்துருக்கள் உதாசீனர்கள் மற்றவரையும் கொள்ளவேண்டும். இதனால் சத்துருக்களை சத்துருக்கள் என்று நினைத்தலும் கூட துறவிகளுக்கு பெருத்ததோர் குற்றமாமென்றதுவெற்பட்டது. சிகையக்ஞோபவீதம் = இவை கன்மங்களுக்கு அங்கமாய் உள்ளன. வேதம் = தத்தம் சாகைக்குரிய சம்ஹிதைகள். இங்ஙனமே இதனை வியாக்யானஞ்செய்யவேண்டும். ஆதலாற்றான் ஆருணிகோபநிடதம் உபநிஷதமாவர்த்தயேத் உபநிஷத்தை ஆவர்த்தி செய்யவேண்டும் என்று உபநிஷத்பாடத்தைவிரித்தது. அங்ஙனமே ஸ்மிருதிகளிலும் ஸர்வாநேவ பரி ஷச்ஶிகா விஷ்ணுஸூத்ரகம் | ப—ஜ ம் வ—ப—ஷ

ஸூக்தம் ச நித்யமாவர்தயேத் யதி: தன் சாகையின் உபநிடதத்தையும் விஷ்ணுவின் ஆயிரம் நாமங்களையும் ஸ்ரீருத்திரத்தையும் புருஷசூக்தத்தையும் நித்தியமாய் யதி அவசியம் ஆவர்த்தனம் செய்யவேண்டும் என்றது. அங்ஙனமே கைவல்லியோபநிடதத்திலும் அத்யாஶ்ரமீ ஸர்வதா ஸக்ருத்வா ஜபேத். அத்தியாச்சிரமியானவன் எப்பொழுதுமாவது ஒருமுறையாவது ஜபித்தல் வேண்டும் என விதிக்கப்பட்டது. எஜுர்வேதியாகாத மற்றவருக்கு ஸ்ரீருத்திரம் கைவல்லியம் தைத்திரீயம் முதலிய உபநிடதங்களை விலக்கியதாக இந்தஸ்மிருதியின் பொருள் ஏற்படுமாதலால் அவ்விதம் அதற்கு பொருள் கூறாது பிரமயக்ஞத்தைவிடுவதே அதன்பொருள் என்பது அல்லது கர்மகாண்டாத்தியயனம் வேண்டுவதில்லையென்பது அதற்குப்பொருள்கொள்ளவேண்டும். ஸர்வகர்மங்கள் = எல்லாக் கன்மங்களின் ஆரம்பங்கள். விட்டு = முறைப்படி சன்யாசத்தால் ஒழித்து; சுபமார்க்கத்தையும் = உலகத்தார் விரும்பும் வாழ்க்கைவழியையும்; அதாவது புண்ணியகருமத்தையும் கர்மப்பயனைப் அடையக்கூடிய பிரமாண்டத்தையும் விட்டு கௌபீனாதிகளை ஏற்பதும்கூட தன்சரீரத்தை மற்றவர் ஒருவாறுவழிபட்டு இருதார்த்தராவதற்காகவேயன்றி தமக்காகவல்லவென்பது இம்மந்திரத்தின்முடிந்தகருத்து. ஆகவே பரமஹம்ஸர்களுக்கு தண்டகாஷாய கமண்டலுமுதலிய பரிக்கிரஹங்களும் லோகானுக்கிரஹார்த்தமேயாம். எ—து

## அவதரணிகை

இனி அதிதீவிரமான பரிபாகம் பெற்றவருக்கு இத்தண்டு கமண்டலம் முதலியவையும் கூட சுவீகரித்தல் அவசியமில்லையென்றும் அவர்கட்கு முக்கியதருமம் இஃதாமென்றும் குறிக்கின்றார்.

தச்ச ந முக்யோஸ்தி — கோऽயம் முக்ய இதி சேத³
யம் முக்ய: — ந த³ண்ட³ம் ந ஶிக²ம் ந யஜ்ஞோ
பவீதம் நாச்சா²த³னம் சரதி பரமஹம்ஸ: ந ஶீ
தம் ந சோஷ்ணம் ந ஸுக²ம் ந து³:க²ம் ந மானாவ
மானே ச ஷடூ³ர்மிவர்ஜம் நிந்தா³க³ர்வமத்ஸ

ச்சாத்வேஷஸுகது:ககாமக்ரோத
லோபமோஹ ஹர்ஷாஸூயாஹங்காரா
தீம்ஶ்ச ஹித்வா ஸ்வவபு: குணபமிவ த்ருஶ்யதே||

(இ—ள்) அது முக்கியமல்ல. எது முக்கியமெனில் இதுவே முக்கியம். தெண்டம் இல்லை; சிகை இல்லை, எக்ஞோபவீதமில்லை போர்வையை ஏற்றுக்கொள்ளமாட்டான் பரமஹம்ஸன். சீதமில்லை, உஷ்ணமில்லை, சுகமில்லை, துக்கமில்லை, மானமில்லை, அவமானமில்லை ஆறுஊர்மிகளையும் தாண்டி நிந்தை, கெர்வம், மாத்ஸரியம், டம்பம் கொழுப்பு, இச்சை, துவேஷம், சுகம், துக்கம், காமம், குரோதம், லோபம் மோஹம், சந்தோஷம், அசூயை; அகங்காரம் முதலியவைகளையும் விட்டு தன் சரீரத்தைப் பிணம்போல் பார்ப்பான் என்று.

(வி—ரை.) அது = கௌபீனம்முதலியவற்றை ஏற்றல்; முக்கியமல்ல = பரமஹம்ஸருக்குச்சிறந்ததானதோர் நித்தியகன்மமல்ல. இனி எதுதான் முக்கியமென வினுநிகழக் கூறுகின்றார். தண்டம், சிகை எக்ஞோபவீதம், போர்த்தும் ஆடை முதலியவைகளை முற்றும் ஒழிப்பதே பரமஹம்ஸர்களுக்கு முக்கியமான உத்தமதருமமாம். இங்கு விவீதிஷா சன்னியாசி யெனப்படும் இப்படித் தானசன்னியாசிகளால் ஏற்றுக்கொள்ளப்பட்ட தண்டம்முதலிய குறிகளுக்கு முற்றும் விலக்ஷணமாயுள்ளது இவரது தண்டம்முதலியவையென்பது இதன்கருத்து. ஆதலாற்றான் சிகையையும் எக்ஞோபவீதத்தையும் அதனுடனே சேர்த்தே குறித்தார். சிகையும் எக்ஞோபவீதமும் சன்னியாசத்தில் முற்றும் கூடாதென முன்வாக்கியம் விதித்தலால் அவற்றின் மறுப்பு இங்கு பயனிற் கூற்றுமாயினும் முன் ஒருவாறு சிகை எக்ஞோபவீதஙகளை விட்டு தண்டம் காஷாயம் முதலியவற்றை ஏற்கவேண்டுமென விதிக்கப்பட்டமையால் உண்மையறிந்த உயர்துறவியிடத்தும் பிரதிப்பிரஸவ நியாயத்தால் எந்த மந்தனுக்காவது முன்விடுபட்டதண்டம் முதலியவற்றைப்போலசிகை முதலியவற்றிற்குச் சம்டந்தமுண்டோவென

உண்டாகும் சங்கையையொழித்து உண்மைபுகட்டுவதில் இவ்வசனம்பயன்படுமென்றறிக. உண்மையில் வித்வானுக்குச் சன்னியாசத்தை விதித்தது இவ்வசனமும், விவிதிஷையுள்ளவற்கு சன்னியாசத்தை விதித்தது முன்வசனமும் என்று கொள்ளுவதே நியாயமாம். பிரம்மசாரி, கிரஹஸ்தன் வானப்பிரஸ்தன் இம்மூவற்கும் துறவுமேலிட்டாலும் அறிவுமேலிட்டாலும் சுகமாய் பரமஹம்ஸ ஆசிரமத்தைப்பெற நேருங்கால் தண்டம் முதலியவற்றை ஏற்றுக்கொள்ளவேண்டியது அவ்வளவுஅவசியமில்லாததுபோல் ஒருசமயம் சிகையையும் எக்ஞோபவீதத்தையும் விடுவதும் அவ்வளவாய் அவசியமில்லையென விபரீதவுணர்ச்சியுண்டாகாதவண்ணம் உண்மையைப்புகட்டி இவ்வசனம் எக்ஞோபவீதங்களைவிடவேண்டுமென்று முக்கியமாய் நிரூபித்ததெனக் கோடலே நியாயமாம், அற்றேல் முற்கூறியபடி வெப்பம் குளிர்முதலியவற்றை நிவர்த்தித்துக் கொள்வதற்காக கந்தை முதலியவற்றை ஏற்றுக்கொள்ளவேண்டியது சன்னியாசிகளுக்கும் மிக்கஉரியதேயாதலால் அதனை முக்கியமலலவென்றது குற்றமாகாதோவெனின், அஃதுளப்பயனைக் கருதிவிதிக்கப்பட்டதோ அப்பயன் இவரிடத்து அமையாதுபற்றிஅவ்வளவாய் அவர்கட்கு அது முக்கியமில்லையென்று நிரூபித்தது நியாயமேயாமென்க. "நைநம் தஹதி பாவக: = இவனை அக்கினிதஹிக்காது" "அச்சேத்யோயமதாஹ்யோயமக்லேத்யோऽசோஷ்ய ஏவ ச = இவன்வெட்டப்படமாட்டான்கொளுத்தப்படமாட்டான் நனைக்கப்படமாட்டான் உலர்த்தப்படமாட்டான் என்பதாதி பலவசனங்களால் அஸங்கோதாஸீனாத்ம சுவரூபநிஷ்டர்களுக்கு எவ்வித குளிர் வெப்பம்முதலியவற்றாலும் பீடையுண்டாகாதாகையாலென்க. அவ்விதப்பீடைகளைவிலக்குவதற்காக கந்தைமுதலியவற்றை ஏற்றலுமவருக்கவசியமாமென்பது சாஸ்திரத்தின் கருத்து. இதனை ஏற்றுக்கொள்ளுதல் முக்கியமல்லவென்றமையால் ஏற்றுக் கொண்டாலும் குற்றமில்லையென்றது ஏற்பட்டது. இவருக்கு குளிர் வெப்பம் காற்று முதலியவையால் என்வருத்தமுண்டாகாதெனவினா நிகழக்குறிக்கின்றார் ஆறூர்மிகளையும் தாண்டிஎன்று. ஆறூர்மிகளாவன:— பசி, தாகம், துயரம், மயக்கம், கிழத்தன்மை, மரண

மென்பனவாம். இவ்வகை இடையூறுகளுக்கே ஆளாகாத ஒருவருக்கு குளிர் வெப்பம் முதலியன பெருமதுயரவேதுவாவது எப்படியென்பது சாத்திரத்தின் கருத்தாம். அவனுக்கு இயல்பில் அமைந்த குணங்களையே அவனுக்கு விதங்களாய்க் காட்டுகின்றார். நிந்தை = தம்மிட மில்லாக்குற்றங்களை ஏற்றி மற்றவர்தூற்றுதல்; அதனைவிடுமென்றால் அதைக்கேட்டகாலத்து மனம் விகாரமடையாதிருத்தல் அஃது அந்நிந்தையினிடத்து அனிஷ்டமென்ற அறிவற்றுநிற்றலேல் அல்லது மற்றவரைநிந்தியாது ஒழித்தலாவது அஃதாகலாம். கௌரவம் = வித்தை குலமுதலியவற்றால் நாம்மற்றவருக்கு அதிகமெனபதாகி அறிவு. மாச்சரியம் = மற்றவர்பெருமையை பொறாதிருத்தல். டம்பம் = மற்றவரை மாற்றும் உபாயம், கொழுப்பு = சரீரமதம்; இச்சை = ஒருபொருளின் கண்விருப்பம். த்வேஷம் = ஒருபொருளின்கண் வெறுப்பு; சுகம் = களிப்பு, அதாவது விரும்பியபொருள் கைகூடுவதால் உண்டாம்உணர்ச்சி; துக்கம் = அதன்எதிர்மறை அதாவது தாம்விரும்பியபொருள் கைகூடாதகாலத்து உண்டாம் உணர்ச்சி. அல்லது தாம்வெறுத்தபொருளை ஓர்ந்தகாலத்துண்டாம் உணர்ச்சி. காமம் = காதல் பெண்களிடத்து இன்பம்; க்ரோதம் = கோபம்; லோபம் = பொருளாசை அதாவது கிடைத்தபொருள்போதாது என்றபேராசை. மோகம் = மயக்க அறிவு. துயரத்தையும் மயக்கத்தையும் முதலில் ஆறு ஊர்மிகளென்றுஎடுத்துமறுத்தமையால் இங்குமீண்டும் அதனையெடுத்துக்கூறியது: கூறலாகாதோவெனின் அதற்கேக இஃதோர்சிற்றுரையாதலால் ஆகாதென்க. சந்தோஷம் = சிரிப்பு முதலியன அசூயை = எப்பொருளினிடத்தும் பொறாமை. அகங்காரம் = ஆண்மை, இவைகளெல்லாம் விடவேண்டுமெனவாம். முக்கியமாய் அனாத்மாக்களிடத்து ஆன்மாவென்ற வெண்ணம்பெருந் தவறுதலால் அஃது ஒன்றே முக்கியமாய் விடத்தக்கதாம். சிரித்தல் சொரிதல் முதலியன ஆதிபதார்த்தமாம். இங்ஙனம் எல்லாவற்றையும் விட்டவற்கு தனசரீரமாயினும் இருப்பதாய் அறியப்படுமோவெனின் அதன் நிலைமையைக்குறிக்கின்றார் தன் சரீரத்தை என்பதாகியால். தன் சரீரத்தைப்பிணம்போல் வெறுக்கத்தக்கதோர் பொருளாய்க்காண்பான் என்பது கருத்து.

## அவதாரணிகை

இங்ஙனம் சிகை முதலியவற்றை விட்டவரே அவராயினும் அவருக்கே எல்லாக்கருமப்பயன்களும் ஒருங்கு சேர்ந்து இவ்வியஞானத்தைக் கொடுத்துவருமென்கின்றார்.

யத்தத்வபுர்த்வஸ்தம் ஸம்ஶயவிபரீதமித்யா
ஜ்ஞாநாநாம் யோ ஹேதுஸ்தேந நித்யநிவ்ருத்த
ஸ்தந்நித்யபோதஸ்தத்ஸ்வயமேவாவஸ்தித: தம்
ஶாந்தமசலமத்வயாநந்தவிஜ்ஞாநகந ஏவாஸ்மி ததேவ
மம பரமம் தாம ததேவ ஶிகா ததேவோபவீ
தம் ச பரமாத்மாத்மநோரேகத்வஜ்ஞாநேந த
யோர்பேத ஏவ விபக்ந: ஸா ஸந்த்யா எ-று

(இ—ள்.) அவன் சரீரம்துவம்சமானமையால் சம்சயம் விபரீதம் மிச்சை என்ற அறிவுகளுக்கு எதுவோ அதுவோ அதனால் முற்றும் விடுபட்டவனும் அதனிடத்தே நித்திய போதமுடையவனும் அதன்மயமாய்த் தான் நிற்பவனும் அந்த சாந்தமாய் அசலமாய் அத்வயானந்தமாய் சித்கனமாய் உள்ளவனே யான். அதுவே எனக்கும் பரமபதம். அது என்க்குச்சிகை; அதுவே யுபவீதம்; பரமாத்மாத்மாக்களுக்கு பேத அறிவை துலைத்தால் அதுவே சந்தியையாம். எ-து

(வி—ரை.) முன் மந்திரத்திற் குறிப்பிட்டபடி யோகிகள் தன் சரீரத்தைப் பிணம்போல் பார்ப்பார் என்பதை இம்மந்திரத்தில் விரித்துக்காட்டுகின்றார். அவன் சரீரம் = மேற்குறித்தயோகியின் சரீரம்; துவம்சமானமையால் = மரணத்தையடைந்ததுபோல வெறுக்கத்தக்கநிலைமையைப் பெற்றமையால். இங்கு ஆன்மாவுக்கு அவித்யாவசத்தால் தோன்றிய மூன்றுகைச் சரீரங்களும் குறிக்கப்பட்டது. இஃது அநாத்மாவென்ற நிச்சயத்தால் அபிமானம் ஒழிக்கப்பெற்றமையின் காற்று ஏற்ற துருத்தியைப்போல காரியகாரியாகாது. பசிதாகமுதலிய உணர்ச்சிகளும் நீங்கி நிற்குமாதலின் அச்சரீர

சம்பந்தத்தாலமைந்தபிராம்மணாதி வர்ணங்களையாவது மற்றையாஶ்சிரமாதிகளையாவது அந்தபிரமநிஷ்டர் ஏற்றுக்கொள்ளார் என்பது இதன்கருத்து. ஆகவே அச்சரீரசம்பந்தத்தால்வரும் கிரியை முதலியவை இவருக்கு வேண்டுவதில்லை என்பது இதனால் அமைந்தது. நிற்க. இவருக்குச்சரீரத்தை மரந்துநிற்கும் படியாய் அமைந்த அவித்யாநாசம் எத்தன்மைத்தெனக்குறிக்கின்றார் சம்சயமென்பதாதியால். சம்சயம் = இருவகைத்தோற்றம் இஃதுபுருஷனோ அல்லது எரிதழலோ என்பதாதி உண்டாவது, அல்லது இவ்வான்மா கர்த்தவோ, அகர்த்தாவோ, என்பதுமாம். விபரீதம் = ஒருதன்மையுடையதொன்றை அதன் எதிர்மறைத் தன்மையுடையதாய் நினைத்தல்; யானையைக்கண்டவோர் நாட்டுப்புரத்தான்,'கீழ்நோக்கிவளர்ந்த கூர்முனைக்கோடுடையதாய் மிக்கவளர்ந்து இருபுறம் வாலுடைய பெரியதோர் எருமையாம் இஃதென தெளியுமறிவுபோன்றதாம்; அல்லது அனாத்மாவான சரீரத்தை ஆத்துமாவென மயங்குதல்; இவ்விபரீத ஞானத்தையேமிச்சையறிவென்பார்மேலோர். அங்ஙனமே ஆசிரியர் பதஞ்சலியாரும் "விபர்யயோமித்யாஜ்ஞாநமதத்ரூபப்ரதிஷ்டம் = விபர்யயம்மிச்சையறிவாம் அவ்வுருவமில்லாவிடத்து அமைதலாலென்றார்" அவ்வுருவமில்லாவிடத்து = அதன்தன்மையில்லாவிடத்து அஃதெனத்தோன்றும் அறிவேயஃதாம் மிச்சையறிவென்பது சம்சயமென்றாவது விபரீதமென்றாவது வகுத்தோதற்கேயாது உண்மையறிவு மயக்கவறிவு திரிபுணர்ச்சிஇவைகளையெலாம் கடந்துசத்தியமுமாகாது, அசத்தியமுமாகாது, யாவராலும்எத்தன்மைத்தெனத் துணியக்கூடாத அவித்தையெனவழங்கப்படும் அனாதிபாவரூபமாம். இதனை அனாதிமயக்கங்கள் அதின்சம்ஸ்காரங்கள் இவற்றின் கூட்டமேயென்பனவாம். ஓர்சாரார்எவ்வழியாயினும், இவ்வறிவுஉண்மை, ஐயம், திரிபு என்றமூவகையறிவிலும் வேறேயன்றியவற்றுள் ஒன்றல்ல. இதுவே சர்வசம்சாரங்கட்கும் மூலமாம். யோகநூலுடையார் மேற்கண்டதிரிபுணர்ச்சியைமிச்சையறிவென்றுவகித்துவேதாந்திகள் மிச்சையறிவென்ற மற்றோர் அறிவை அவித்தையென்பார். அங்ஙனமே யாசிரியர் பதஞ்சலியரும் "அநித்யாஶுசிது:காநாத்மஸு நித்யஶுசிஸுகாத்மக்யாதிரவித்யா.

அநித்யம், அசுத்தம், துயரம், அசேதனம், நித்தியசுத்தம், சுகமும், சேதனம் என்று எண்ணுதலே அவித்தையாகும் என்றனர். இதனால் பொய்யும் ஜடமும் துக்கமுமான பிரபஞ்சத்தை சத்தும்சித்தும் ஆநந்தமும் என்று நினைத்தலே அவித்தையாமென்றது முடிந்தமையால் ஆசிரியர் பதஞ்சலியர் வேதவியாசர்என்ற இருவருக்கும் சித்தாந்தமொன்றே யென்பது முடிந்தது. விரிவுமற்றோரிடத்தில். இங்கு ஐயம்திரிபும் என்ற இரண்டு அறிவுகளினும்வேறாயும் மெய்யறிவின் எதிர்மறையாயும் எடுக்கப்பெற்ற நிச்சயஅறிவு அனிர்வசனீய அறிவேயெனக்கொள்ளல்வேண்டும். அதுஇருவகைத் தன்மைகளைப்பற்றி ஒருபொருளிடம் நிகழ்ந்தஅறிவு அன்றாதலின் ஐயமன்று. அஃது முற்றும் மாறான தன்மையைப் பற்றியதோர் அறிவன்றாதலின் திரிபுமன்று. ஆகவே அனிர்வசனீயமேயாம் இக்ஞானத்தையே உலகத்திற்கு மூலகாரணமென வேதாந்தங்கள் நிரூபித்தன என்பது திண்ணம். நிற்க, இப்பொழுது எவரேனும் அவ்வகை மித்தையறிவை அனுபவிப்போர் உண்டா? அனுபவிப்பாராயின் கபிலமாமுனிவர் நாநிர்வசநீயவல) தத ஸம்ஹயாக அநிர்வசனீயம் என்பதொன்றில்லை அசம்பவமாதலால் எதுஎங்ஙனம் ஒவ்வும் எனின் கூறுதும் ஒருவன் மேற்கடற்கரையில் சஞ்சரித்துக்கொண்டு இளைப்படைந்து ஓர்மரத்தடிசென்றான். அங்கு குளிர்ச்சியுடைய அம்மரத்தைக்கண்டுஅவன் இது எம்மரமெனச் சிந்தித்தான். அங்கு ஓர் வைத்தியன் மலையாளி எமதுபாஷையில் இதனை மரவெட்டி மரமென்பார் என்றார். அதனைக்கேட்ட தமிழன் மலையாளமறியானாகையால் ஏதோகாதில் சிலஒலிகள் பட்டனவேயன்றி ஒன்றும் தெரியவில்லையெனவே வீட்டு விடநேர்ந்தது. அங்கவனுக்குண்டான அறிவுஉண்மையறிவா? அது உண்மையறிவாயின் அவன் அனுபவத்திற்கு அதன் தன்மை எட்டியிருக்கலாம். அஃதின்மையால் அஃதன்று மற்றுஐயமுமன்று இருதன்மைதோற்றாமையால். திரிபுணர்ச்சியாயின் இஃதுபுன்னைமரமென்றலலவோ துணியவேண்டும். அவனுக்கு அறிவில்லை யென்பது கூடாது கண்ணால் பொருளைக்கண்டு கொண்டிருத்தலால். இது மயக்க அறிவுமல்ல. தொட்டுணரும் தன்மை முதலிய வற்றால் மரம் அனுபவிக்கப்படுதலால். ஆகவே ஸத்துமஸத்துமாயுள்ள ஓரறிவே இஃது எனிலும் கூடாது. அவ்வித அறிவு

சம்பவிக்காமையினும் அப்பிரசித்தமாதலாலு மென்க. ஆகவே ஏதோ ஒருமாந்தான் ஆயினும் முற்றும் யான் அதனை யறியேன் என இருதன்மை பெற்றுஞாதுக்ஞானரூபமாய் இருக்கும் அவ்வறிவு ஓர்வகை அனிர்வசனீய அக்ஞானமே யெனக்கொள்ள வேண்டும். இதனையே வேதாந்திகள் மிச்சையறிவுஎன்றார். திரிபுணர்ச்சிக்கும்வேறான அவித்தையென்று இதனையே யோகிகள் வழங்கினர். இங்ஙனம் வேதத்தாலேயே ஸ்பஷ்டமாய் உண்மையறிவு திரிபுணர்ச்சி, சம்சயம், அறிவின்மை இவற்றிலும்வேறாய் மிச்சையறிவு எடுத்தோதப்பட்டமையின் அதனை தவறெனச் சூத்திரஞ்செய்த நிரீச்சுரவாதியான சாங்கியன் ஆன்றோர் அவையில் மணம்பெறாரென்க. அவர்குறித்த யுக்தியும்தவறே என்பதுமுற்குறித்த மலையாள மரஅறிவின்மையில் அனிர்வசனீயத்துவம் சம்பவித்தமையால் விளங்கும். மேலும் ஒவ்வொருவஸ்துவிலும் காண்பானா ஒவ்வொருவருக்கு இத்தன்மைச் சம்சயமுண்டாமென்பது அனுபவசித்தம், உதாரணமாக தூரத்தில் காணப்படும்மேகங்கள் புகைபோல காணப்படுகின்றன. சூரியமண்டலம் ஒருசாணளவே காணப்படுகின்றது. பர்வதங்களும் விரிந்தபசுந்தரையாய்க்காணப்படுகின்றன- இவையெல்லாம் அறிவின்மையென்றும் சொல்லக்கூடாது. அனுபவத்தின் விரோதமாதலால். சம்சயமுமல்ல, இருதன்மையின்மையால். உண்மையறிவுமல்ல பர்வதவறிவு உண்மையால். திரிபுமல்ல. வேறுதன்மையின்மையால். பர்வதந்தோன்றுகின்றது. அதன்இயல்பு தெரியவில்லையென்றே அனுபவம் இருத்தலால். "இதனால் சுவப்பன ஜகத்தும் சன்னிபாதத்தில்தோன்றும் கந்தர்வநகரமும் இந்திரஜாலத்தோற்றம்முதலியவை நிரூபிக்கப்பட்டனவாம். இதனால் ஐயம் திரிபுமுதலியசம்சாரமூலமான அவித்தை நிரூபிக்கப்பட்டதாயிற்று. அதன் விலாசமொழிந்த விடம் மோக்ஷங்கைகூடுமாமென்பது" அதனால் விடுபட்டவன் என்பதாதியால் நிரூபிக்கப்படுகின்றது. இதனால் முன்குறிக்கப்பட்ட சம்சயமுதலியவற்றிற்கு எது ஹேதுவோ அவ்வவித்தையினாலே முற்றும் விடுபட்டவன் ஆத்மா என என்று அறிவான் அன்றே அவன் நித்திய ஞானமயனாய் பிரமசுவரூபமாய் எஞ்சுவான். பிரமசுவரூபமென்றது அநாதியிலே அவித்யாசம்பந்த மற்றதாதலின் அதனை அவித்தையுடன்சேர்த்து பிரித்ததுஒவ்வுமோவெனின்

அற்றன்று. முன்னமைந்த சுவரூபத்தையே வற்புறுத்திக்காட்டிய
தே இவ்வசனமன்றி முக்தியென்பதுபுதிதாய்த்தோன்றியதாகஇவ்
வசனம் யாதும் குறித்திலது ஆகையால் அங்ஙனமாக எஞ்சிய
பொருள்தான் யாதெனின் அவ்வான்மாவே என்கின்றார் "அத
ன்மயமாய் என்பதாதியால். "தானேநிற்பவன்" என்றதால் தன்
னிலும்வேறுபொருள் இலையெனக்காட்டப்பட்டது. ஆத்மசுவரூ
பத்தைக் குறிக்கின்றார் சாந்தமாய் என்பதாதியால். சாந்தம், அ
வித்தை அதின் சம்பந்தம் இவற்றால் முக்காலமும் சம்பந்தப்படா
தவன் என்று சங்கரானந்த குருமூர்த்திகள் உரைத்தபொருள்ஸ
ர்வப்பிரபஞ்ச மயக்க அதிஷ்டானமென்பதும் ஒடுங்குமிடம்என்
பதும அதன்பொருளாகலாம். அசலம் = நிறைந்தது. அத்வயம் =
ஸஜாதியம்முதலிய மூவகைவேற்றுமையற்றது; ஆனந்தம் = சுத்
தசுகமாத்திரம். சித்கனம் = சின்மாத்திரம். யான் = யானென்று
அனுபவிக்கப்படுபவன் இதுவே தனக்குள்ள பரமநிஷ்டை
யாதலால் அதுவே எல்லாமென்கின்றார். இவ்விதமான விருத்தி
யே இவருக்குச்சிகையும் உபவீதமுமாய் இருக்குமாதலால், அஃ
து வெளியில் வேண்டுவதில்லை என்பதே இங்கு உபசங்கரிக்கப்
பட்டது. இனி இவர் எந்தக்காலத்தில் எந்தச்சந்தியை எம்மந்தி
ரம் கொண்டு உபாசிப்பர் என்றுசங்கை நிகழ அதனை ஒட்டுகின்
றார் பரமாத்மா' என்பதாதியால். பரமாத்மா = மாயையை உபாதி
யாய்ப்பெற்றஈசுவரன்; ஆத்மா = அவித்தையைஉபாதியாய்ப்பெற்
றஜீவன். இவ்விரண்டிற்கும் அநாதிசித்தமான அபேதத்தை என்
றுஅறிவான் என்றுபேதவாசனையைத் துலைப்பான் அன்றே அவ
ன் மஹாசந்தியாவந்தனத்தை யனுஷ்டித்தவனாவான் என்பது
வேதத்தின் கருத்து. 'பேதவாசனை யென்பது சுருக்கமாய் ஐவ
கைப்பட்டது. அதாவது|ஜீவேசுவரபேதம், ஜடேசுவரபேதம் ஜீ
வஜடபேதம், ஜீவர்களின் உட்பேதம், ஜடங்களின் உட்பேதம்

## உபநிஷத்வித்யா

இவ்விருவகை வேற்றுமைகளும் தொலையாதொழி அவர்கட்கு ஸ்வரூபானுசந்தானம் கிடைக்காதாகையால் ரிபுமுதலியமஹாயோகிகள் அப்பேதவாசனநாசசக்தியை உபாசிப்பாரென்பது மந்திரார்த்தத்தின் ஒர் சிறிது.

## அவதரணிகை

இனி பரமஹம்ஸர்களின் தருமங்களைக் குறிப்பாராய் அவர்களைப் புகழ்கின்றார்.

𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍𑌕𑌾𑌮𑌾𑌨𑍍 𑌪𑌰𑌿𑌤𑍍𑌯𑌜𑍍𑌯 𑌅𑌦𑍍𑌵𑍈𑌤𑍇 𑌪𑌰𑌮
𑌸𑍍𑌥𑌿𑌤𑌃 𑌜𑍍𑌞𑌾𑌨𑌦𑌣𑍍𑌡𑍋 𑌧𑍃𑌤𑍋 𑌯𑍇𑌨 𑌏𑌕
𑌦𑌣𑍍𑌡𑍀 𑌸 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 ||

(இ—ள்.) எல்லாக்காமங்களையும் விட்டொழித்து பரமாத்வைத நிஷ்டையில் இருப்பவனாய் ஞானதண்டத்தை யேற்றவன் ஏகதண்டியெனப்படுவான், எ—று.

(வி—ரை) எல்லாக்காமங்களையும் = சாம்மியப்பொருளனைத்தையும்; விட்டொழித்து = தொலைத்து, அதனிடத்தே விருப்பத்தை ஒழித்து என்பதுபொருள்; பரமாத்வைத நிஷ்டை = எவ்வகையிலும் துவைதவாசனையில்லாது சுத்தாத்வைதநிஷ்டை அதாவது மீகூறியற்ற பரமானந்தநிலைமை. அது இங்கு ஞானமென்று உபசரிக்கப்பட்டது. இஃது எவனால் தரிக்கப்படும் அவனே முக்கியமான தண்டி. அதாவது உத்தமசந்நியாசி என்பது கருத்து.

## அவதரணிகை

அங்ஙனமாகாத ஏனைச்சந்நியாசிகளை நிந்திக்கின்றார்;

𑌕𑌾𑌷𑍍𑌠𑌦𑌣𑍍𑌡𑍋 𑌧𑍃𑌤𑍋 𑌯𑍇𑌨
𑌸𑌰𑍍𑌵𑌾𑌶𑍀 𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌃
𑌤𑌿𑌤𑌿𑌕𑍍𑌷𑌾𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯
𑌶𑌮𑌾𑌦𑌿𑌗𑍁𑌣𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌃

ஷிக்ஷாகாரொதெ௫ணயொஜீவெக
ஸவாஷீயதிவூத்திஹா
ஸயாதிநரகாநுவொராநு
உஹாரெளரவஸஂஜ்ஞிகாநு॥ எ—து

(இ—ள்) எவன் கட்டைத்தண்டத்தைக் கையிலேந்தி, ஞானஹீனனாய், பொருமை ஞானம் வைராக்கியம் சமாதிகுணங்கள் இவைகள் அற்றவனாய் அகப்பட்டவிடத்தில்அன்னமருந்தி பிச்சைமாத்திரத்தில் சன்னியாசத்தை யொழுத்திடுவான். அவன் அநேக கோரநரகங்களைப் பெறுவான். யதிகளின் விருத்தியைக் கெடுத்தவன் பாபி மஹாரௌரவாதிகளுக்குறியவன். எ—து

(வி—ரை.) இதனால் காஷ்டதண்டத்தை தரித்தல் விலக்கப்பட்டதல்ல. மற்று அத்தண்டமாத்திரமே சன்னியாசலக்ஷணமாய்கொண்டு ஒழுகும் ஞானஹீனரைப்பற்றிப்பேசியதே இஃது. ஆதலால் எவன் சன்னியாசத்திற்குரிய ஞானவைராக்கிய சாதனசதுஷ்டயாதிகளைப் பெறாதவனாய் பிச்சைமாத்திரத்திற்காகச் சன்னியாசம் ஏற்பான் அவ்வவ்வேடம் பூண்ட சன்னியாசியை அர்ச்சிப்பதும் பெரியதோர் தவறுமென்பது இதன்கருத்தாயிற்று. இவ்வுண்மையே சங்கரானந்த யோகிகளும் தமது பாஷியத்தில் விரித்துரைத்தனர் அதன்விரிவையங்கேகாண்க.

## அவதாரணிகை.

இனி தேறிய பரமஹம்ஸலக்ஷணத்தைக் குறிக்கின்றார்.

ஜ.௯உஜெஸஂஜ்ஞாக்ஷா ஸவாஉஹஂஸஃ।

(மூ—ள்) இவ்வேற்றுமையறிந்த அவன் பரமஹம்ஸன்

(வி—ரை) எவன் அறிஞனுக்கும் அறிவினனுக்கும் உள்ள இந்த லக்ஷணத்தையறிவான், அங்ஙனமேயனுஷ்டிப்பான், அவனேபரமஹம்ஸனாம் என்பது இதன் கருத்து. ஞானதண்டமுள்ளவனுக்கு எந்தக்காலத்திலாவது எங்கும் அன்னம் ஏற்கநேர்ந்தால்

அஃது குற்றமாகாது. பசிவேளைக்குக்கிடைத்ததே உபயோகித்துக் கொள்வது அவன் விருதமாதலால்; (எ—து)

## அவதாரணிகை.

இனிஉண்மையறிந்த உயர்பரமஹம்ஸனது சுவரூபத்தைக் குறிக்கின்றார்.

𑌦𑌿𑌗𑌮𑍍𑌬𑌰𑍋 𑌨𑌿𑌰𑍍𑌨𑌮𑌸𑍍𑌕𑌾𑌰𑌃
𑌨𑌿𑌃𑌸𑍍𑌵𑌧𑌾𑌕𑌾𑌰𑌃 𑌨𑌿𑌰𑍍𑌨𑌿𑌨𑍍𑌦𑌾 𑌨𑌿𑌃𑌸𑍍𑌤𑍁𑌤𑌿𑌃
𑌯𑌾𑌦𑍃𑌚𑍍𑌛𑌿𑌕𑍋 𑌭𑌵𑍇𑌦𑍍𑌭𑌿𑌕𑍍𑌷𑍁𑌃 (எ—து)

(இ—ள்) திகம்பரனாய் நமஸ்காரமில்லாதவனாய் ஸ்வதாகாரமில்லாதவனாய் நிந்தையில்லாதவனாய் ஸ்தோத்திரமில்லாதவனாய் எதிர்ச்சையுள்ளவனாவான் பிக்ஷு. எ—து

(வி—ரை) திகம்பரன் = அவதூதன் வஸ்திரம் முதலியவையும் இல்லாதவன்; நமஸ்காரமில்லாதவன் = மற்றவரை நோக்கி இவர்வணங்குவதும் மற்றவர்தம்மை வணங்கத்தாம்களிப்படைவதும் இவருக்கிருக்கக்கூடாது. ஸ்வதாகாரம் = பிதுர்கர்மா; நிந்தை = மற்றவர்தம்மை நிந்திக்கவாவது தாம் மற்றவரை நிந்திக்கவாவது கூடாது. அப்படியென்றால் மற்றவரால் தாம் நிந்திக்கப்படும்காலத்துத்துயரமடையாமல் இருக்கவேண்டும். தாமோ மற்றவருக்குத் துயருண்டாம் நிந்தனை வழியை யேற்கலாகாது என்பது; எதிர்ச்சையுள்ளவன் = தற்செயலாய் கிடைக்கும் ஆகாராதிகளைக்கொண்டு பசிமுதலியவற்றை தீர்த்துக்கொள்ளுபவன். இவ்விதஇலக்கணமுள்ளவனே சன்னியாசியாமெனில் இவனே உத்தம சன்னியாசியாமென்பது கருத்து.

## அவதாரணிகை

இங்ஙனம் அமைந்த உத்தமசன்னியாசியின் இலக்கணத்தையே மீண்டும் கேட்போர் சௌகரியத்துக்காக விரிக்கின்றார்.

𑌨𑌾𑌵𑌾𑌹𑌨𑌂 𑌨𑌵𑌿𑌸𑌰𑍍𑌜𑌨𑌂
𑌨𑌮𑌨𑍍𑌤𑍍𑌰𑌂 𑌨𑌧𑍍𑌯𑌾𑌨𑌂 𑌨𑌲𑌕𑍍𑌷𑍍𑌯𑌂

நாவாஹநம் ந விஸர்ஜநம் ந மந்த்ரம் ந த்யானம் நோபாஸனம் ந லக்ஷ்யம் நாலக்ஷ்யம் ந ப்ருதக் நாப்ருதக் நாஹம் ந த்வம் ந சேதம் ஸர்வம் ச நிகேத ஸ்திரமதிரேவம் ஸ பிக்ஷு:॥ எ—து

(இ—ள்) ஆவாஹனம் இல்லை. விஸர்ஜனம் இல்லை. மந்திரம்இல்லை, தியானமில்லை, லக்ஷியமில்லை, அலக்ஷியமில்லை, வேறில்லை, ஒற்றுமையில்லை, நானில்லை, அவனில்லை, நீயில்லை, எல்லாமில்லை, இடமில்லை, இங்ஙனம் திடமித்தனெவன் அவனே பிக்ஷு. எ—து

(வி—ரை.) "ஆவாஹனம் விஸர்ஜனம்" என்றது அடியும் முடியுமாய், ஸவிசேஷப்பிரம உபாஸ்தியில் அமையும் பதினாறு உபசாரங்களையுங் குறித்தது. இவை சுத்தாத்வைத ஆத்மநிஷ்டர்களான பரமஹம்ஸர்களுக்கு வருதல் போதல் முதலியபாவனையின்றிடமாய்த்தோன்றும் ஆவாஹனாதிகள் அஸங்கதமாம் என்பது இதன்கருத்து. மந்திரம்இல்லை=வெளிப்பூஜையில்லாமல் போயினும் மானஸிகபூஜையேனும் உண்டோவென்ற ஆசங்கையையகற்றுவது இது. அவர்கள் பிரமஸ்வரூபர்களாகவே நிற்றலால் அவர்கட்கு மந்திரம் முதலியவைகளால் போற்றப்படும் பொருள்வேறு அமையாமையாலென்க. இங்ஙனம் வெளிப்பூசையும் மானஸிகபூஜையுங்கூட இல்லாதவருக்கு எவ்வகை யனுஷ்டானமுளதென வினவிகழ அதனைக்காட்டுகின்றார் "லக்ஷியமில்லை" என்பதாதியால். லக்ஷியம்=காணக்கூடிய பிரபஞ்சம் அஃதில்லை. அலக்ஷியம்=இவ்வகைத்தெனத் துணிபப்படாத அவித்தைஸம்ஸாரமென்ற பிரபஞ்சத்திற்கு மூலம் அஃது இலையென்றே பாவிக்கவேண்டுவது அவர்தொழிலாம்; எங்ஙனமதனை இலையென்று பாவித்தலெனின்,அதனைக்காட்டுகின்றார் வேறிலை என்பதாதியால். அதுமுற்றும்பொய்யோவென மயங்காவண்ணம் பொய்யுமல்ல மெய்யுமல்ல இரண்டிற்கும் விலக்கணமாயுள்ளது இதன் கருததாம். வேறில்லை=அதிட்டானமான ஆன்மாசுவரூபத்திலும் அஃதுவேறன்று. ஆதலின் ஒற்றுமையில்லை= அநிருதமும் ஜடமும் துக்கமுமானபிரபஞ்சத்திலும் ஆத்மா சச்சிதாநந்தனாய் இருப்பவனாதலின் இரண்டிற்கும் ஒற்றுமைகூடாது. ஆனல்வேறுமல்லஒன்றுமல்லவென

அமைந்தது. இங்ஙனம் பிரமேயங்களெல்லாம் அதிட்டானத் தைப்போதிக்கப்படுங்கால் பிரமாதாவாவது முளைப்பானேவெனின் அவனும் பிரமாதாவென்ற நிலைமையுடன் முளைக்கானென நானில்லை என்பதாதியால் விரிக்கின்றார். நான் = தன்மை; நீ = முன்னிலை; அவன் = படர்க்கை; ஆகவே தன்மைமுன்னிலைபடர்க்கையென மூவகைப்பட்ட பிரமாதாக்களும் இலவென்றேபாவிக்கவேண்டும். இங்ஙனமாயின் திருபுடி ஒழிந்திட எல்லாம்மிச்சையாமேயெனின், ஆமெனஎல்லாம் இல்லையென்பதால் குறிக்கின்றார். இங்ஙனம் எல்லாம் இல்லையானல் அறிவு நிர்விசேஷமும் நிர்விஷயமுமாகுமாதலின் அஃதங்ஙனமேயென இடமில்லையென்பதால் வற்புறுத்துகின்றார். இடம் = அறிவின்விஷயமும், விசேஷமும்; இல்லை = பொருள்களின் வேற்றுமையால் ஒருவாறு அறிவுபல்வகைப்படினும் அது இயல்பில் பல்வகையல்ல என்பது இதன்கருத்து. இங்ஙனம் நிடசித்தன் எஞ்ஞான்றும் ஆத்ம சுவரூப மாத்திரத்தில் தமது சித்தவிருத்தியைச்செலுத்துபவன் அவனே பிக்ஷு உண்மையான உயர்பரமஹம்சன் அவனேயாமென்பது வேதத்தின் கருத்து. ஸ்ரீசங்கரானந்த குருமூர்த்திகள் ஓரிடம் நிலைக்காது திரிவதே இடமில்லை யென்பதற்கு பொருளாய்க்கொண்டு அது விவிதிஷா சன்னியாசிகளின் விஷயமென ஓதுகின்றார். அவ்வகைச்சன்னியாசிகளுக்கு குருவதினமாய் நிற்றல் விதிக்கப்பட்டமையின் அவரை நாடோறும் இருந்தவிடம் விட்டுவெருட்டுவது ஒவ்வாது என்றுஎண்ணியே அங்ஙனம் பொருளுரைத்தோமென்க. மேலும் வித்வத்சன்னியாசிகளின் தருமங்களேதொடர்ந்து நிரூபிக்கப்படுதலால் அதே இப்பதத்திற்குப்பொருளென்பது நியாயமாய் அமையுமென்க

## அவதரணிகை

இனி அவர்களுக்கே யுள்ளவேறு தருமங்களை நிரூபிக்கின்றார்.

வெஶ்ஶவணாஜாதீநாம் ஒ நவைபிரு ஹெஜ

ஸஹொகஸம் ஸாவஹொகஸம்வ

ஸ்வாயஙொ ஸவாவாயகஃ

க ஐதிவெயக்வாயலொவெஸ்வ என்று

(இ—ள்) அந்த பிக்ஷு சுவர்ணம்முதலியவற்றை வாங்கக்கூடாது. பார்வையும் விசேஷப்பார்வையும் ஏற்றுக்கொள்ளக்கூடாது. பாதகம் இல்லை. அபாதகம் இல்லை ஏதென்றால் பாதகமுண்டு. எ—து.

சுவர்ணம் முதலிய என்றதனால் எல்லாஉலோகங்களும் குறிக்கப்பட்டன. அவன் தன் உபயோகத்திற்காக எவ்விதலோகபாத்திரங்களையும் உபயோகிக்கக்கூடாது என்பது கருத்து. பார்வையென்பது இந்திரியங்கள். அதனை கிரஹிக்கக்கூடாதென்றால் அதன் வழிசெல்லக்கூடாதென்பது கருத்து. விசேஷப்பார்வை யென்பது புலன்களின் விஷயங்களின்மேல் ஆகுபெயராய்நின்றது. இதனால் எவ்வநாத்மபதார்த்தங்களையும்ஏற்கக்கூடாதென்றேற்பட்டது. சுவர்ணம் முதலிய வஸ்துக்களின்கண் பொருளின் சுபாவத்தால் பத்தாத்மாக்களின் புலன்கள் பற்ற அதனிடத்து மமதை விருத்தியாகுமாதலின் அதனைத்துலைக்கவேண்டுமென்பது இங்கு சொல்லப்பட்டதாம். அப்படிபுள்ளவருக்கு ஏதும்பாதகமில்லை. இதனால் பரமஹம்ஸர்களுக்கு காண்பொருளனைத்தையும் விட்டொழிப்பதேதருமமென்றுஏற்பட்டது. இனி சிஷ்யன் வினவுகின்றான் அபாதகம்.ஏது என்பதால் மேற்கண்டபரிக்கிரஹங்கள் ஏதும்களுக்கூடாதெனின் எதுதான் அவர்களேற்கத்தக்கதென வினவின் கருத்து. பாதகமுண்டு = இது குருவின் சமாதானம்; எதனை ஏற்றாலும் இவனுக்குப்பாவமுண்டென்பது அதன்கருத்து. காலத்தால் சர்ப்பம்போல் இஃது ஆகுமெனபது உட்கருத்து. மந்திரத்தால் கட்டுப்பட்ட ஓரரவம், மாந்திரிகன் அசுசியாயுள்ள காலத்து இடைநோக்கி யவனைத்தீண்டித்துலைக்குமென்பதுபோல்விஷயங்களும் எவ்வளவு அறிவுள்ளயதியாயினும் அவனைச் சமயம்நேர்ந்துழிமயக்கி ஒழித்திடுமென்பதாம். எ—து

## அவதாரணிகை

முன்மந்திரத்தின் இறுதியில் குறிக்கப்பட்ட பாவத்தைப் பிரித்துக்காட்டுகின்றார்.

யஸ்மாத்பிக்ஷுர்ஹிரண்யம் ரஸேந த்ருஷ்டஞ்சேத்

ஸ ப்ரஹ்மஹா பவேத் யஸ்ய பிக்ஷோர்ஹிரண்யம்
ரஸேந ஸ்ப்ருஷ்டஞ்சேத்ஸ பௌல்கஸோ பவேத்
யஸ்ய பிக்ஷோர்ஹிரண்யம் ரஸேந
க்ராஹ்யஞ்சேத்ஸ ஆத்மஹா பவேத்
தஸ்மாத்பிக்ஷுர்ஹிரண்யம் ரஸேந த்ருஷ்டஞ்ச
ந ஸ்ப்ருஷ்டஞ்ச ந க்ராஹ்யஞ்ச || எ—று

(இ—ள்) எதனல் பிக்ஷு சுவர்ணத்தை ஆசையுடன்பார்ப்பானுனல் அவன் பிரம்மஹத்திக்காரனுவான். எதனல் பிக்ஷு, சுவர்ணத்தைத் தொடுவானுனல் அவன்சண்டாளனுவான். எதனல் பிக்ஷு சுவர்ணத்தை ஆசையுடன்வாங்குவானுனல் அவன் ஆத்மஹத்தி செய்தபாபியாவான், ஆகையால் பிக்ஷு சுவர்ணத்தை இச்சையுடன். பார்க்கலாகாது, தொடலாகாது வாங்கலாகாது. எ—று

(வி—ரை) இச்சையுடனென்றதால் = இஃது எமக்குவேண்டுமென்றதோர் அபிமானத்துடன் ஒருபொன்னைப் பார்ப்பானுயின் அவனுக்குக் குறித்தபாபமேயாகுதற்செயலால் சுவர்ணத்தைக் காண்பானுக்குக் குற்றமில்லை யென்பது கருத்து. பிரமஹத்திக்காரன் = பிரமஹத்திபாபத்துக்குச் சமமான பாபமுள்ளவன்; தொடுவனுனல் = முன்போல் ஆசையுடன் சண்டாளனுவான்; இங்கு மூலத்தில் புல்கஸன் என்றிருத்தலால் சண்டாளனுக்குச்சிறிது மேலும், சூத்திரர்களுக்கு மிக்கக்கீழுமுள்ள ஓர்சங்கரஜாதி இதன்பொருளாம்; அவனுவானெனில் அடுத்த ஜன்மத்தில் சண்டாளனுவானென்றுவது, இச்சென்மத்திலேயே ஆன்றோர்களால் அச்சாதியானைப்போல் ஒதுக்கபடுவானென்றுவது, பொருள் கொள்ளவேண்டும்; ஆத்மஹத்திசெய்தபாபி = இதனமேல் உத்தமமான வேறுபாவமில்லையாதலின் அதனைபபெரிதாய்க் குறித்தார். ஆதலால் என்பதாதியால் உபசங்கரிக்கின்றார். இதனல், மண், மரம், பழம்முதலிய பாத்திரங்களை இச்சையுடன் எற்றாலும் லோகபாத்திரங்கள் தற்செயலாய்க்கிடைத்தாலும், உபயோகிக்கலாமென்றபொருள் கிடைக்கின்றது தன்முயற்சியில்லாமல் தற்செயலாய்

பெண்களைக்கண்டால் அவர்களைக்காண்பதும் யதிகளுக்குக்குற்றமாவதுபோல் தற்செயலாய்க்கிடைத்த சுவர்ண தரிசனமும் அதின் பரிசமும் அதின் உபயோகமும் அவ்வளவு குற்றமல்ல என்பது மாத்திரம் இவ்வசனத்தின் கருத்தேயன்றி இச்சையில்லாதழியாவது கனகம், காமினி முதலியவற்றைக் காண்பதுங்கூட பரிபூர்ண சித்தியைப் பெறுதற்குப் பெரியதோர் இடையூறுமென்பது திண்ணம். இங்கு சுவர்ணமென்றது மனிதன் விரும்பக்கூடிய பெண்முதலிய ஏனையப்பொருள்களின் மேலும் ஆகுபெயராய் நிற்குமாதலால் உலகத்தைத்துறந்தவனுக்கு வாந்திசெய்ததை வாரியருந்துவதுபோலும் மலத்தை மணம் பார்ப்பது போலும் மீண்டும் உலகவாசனையை யேற்றல் பெரியதோர் குற்றமாமென ஆசிரியர் அம்புஜாஸனர் உபதேசித்தாரென்க.

எ—து

## அவதாரணிகை

இனி அப்பரமஹம்ஸனுக்கு சுவானுபவத்தால் உண்டாகும் அத்வைதபிரமாநந்தத்தை யுக்தியுடன் நிரூபிக்கின்றார்.

𑌸𑌰𑍍𑌵𑌾𑌨𑍍𑌕𑌾𑌮𑌾𑌨𑍍𑌮𑌨𑍋𑌗𑌤𑌾𑌨𑍍𑌵𑍍𑌯𑍁
𑌦𑌸𑍍𑌯𑌦𑍁𑌃𑌖𑍇𑌷𑍍𑌵𑌨𑍁𑌦𑍍𑌵𑌿𑌗𑍍𑌨𑌃
𑌸𑍁𑌖𑍇𑌷𑍁𑌨𑌿𑌃𑌸𑍍𑌪𑍃𑌹𑌃 𑌤𑍍𑌯𑌾𑌗𑍋
𑌰𑌾𑌗𑍇 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰 𑌶𑍁𑌭𑌾𑌶𑍁𑌭𑌯𑍋𑌰𑌨𑌭𑌿
𑌸𑍍𑌨𑍇𑌹𑍋 𑌨 𑌦𑍍𑌵𑍇𑌷𑍍𑌟𑌿 𑌨 𑌮𑍋𑌦𑌂 𑌚 ॥

(இ—ள்) மனதிலுள்ள எல்லாக்காமங்களும் தொலையும் துக்கத்தில் வருத்தமடையமாட்டான் சுகத்தில் ஆசைப்படான் ஆசையைத்தொலைப்பான் சுபாசுபங்கள் எதிலும் பற்றுவைக்கமாட்டான் ஒன்றையும்வெறுக்கான்- ஒன்றையும் கண்டுகளிப்படையமாட்டான்-

எ—து

(வி—ரை) எவ்விதமான விசேஷநிஷ்டையால் மனதிலுள்ள சங்கற்பங்களெல்லாம் முற்றும் தொலையும் அப்பொழுது சங்கற்பத்தையே உருவாகக்கொண்ட மனமும் தொலையுமாதலால் சரீரத்தினிடத்து தழல்பட்டாலும் சந்தனம் முதலியவற்றைப்பூ

சு

சினாலும் அவனுக்குச் சுகதுக்கஙகள் ஏதும் இலையாமென்பதும் அவன் சர்வகாமசன்னியாசியாதலால் எங்கும் "உதாசீனனாய்" பற்றற்றவனாய்நிற்றலே பரமஹம்ஸனுக்கு லக்ஷணமென்பதும், இஃது தள்ளற்பாலது இஃது கொள்ளற்பாலது என்ற வியவஸ்தை அவனுக்கு இன்மையால் அவன் நித்தியாநந்த சுவரூபனேயாமென்பதும் இதன் கருத்தாம்.

## அவதாரணிகை

இனி எல்லாப் பிரபஞ்சங்களுமொழிந்த விடம் பரமஹம்ஸனுக்குப் பரமானந்தாத்வைதம் சித்திக்குமென்பதை நிரூபிப்பாராய் உபசங்கரிக்கின்றார்.

ஸவெ-ஷாமிஷி யாணா-ம-திரு-வாரெவா
யக்ரூ-தூரெ நூவாவஸீயரெ க
த-வணோ-ா நாரெஜுகவொலஃ
தஷ் ரெஹூயா ஊஃவேஷீ திக்ரு-தக்ரு ரெ தாஹுவதி
க்ரு-தக்ருரெ-தாஹுவ-தீதா-வஸநிஷக ||

(இ—ள்) எல்லா இந்திரியங்களுக்கும் கெதி ஒடுக்கமே, ஆத்மாமாத்திரத்தில் நிற்பது எதுவோ அதுவே, பூரணா நந்தபோதம் அந்த பிரமம்ஞானே என்று; கிருதகிருத்தியனாவான் கிருத கிருத்தியனாவான் என்பது உபநிஷத்து

(வி—ரை) "எல்லா இந்திரியஙகளுக்கும்" கெர்ப்பத்தின்கண் ஒடுக்கம் உண்டாகுமோ அவ்வதிட்டானமே ஆநந்தாத்ம ரூபமாதலால் அதன் மாததிரையாய் ரஜ்ஜுவினிடத்துப் பாம்பைப் போல உலகம் ஒடுங்குங்கால் எஞ்சியதே முக்தசுவரூபமாம். அதலாற்றான் எவ்வித தோற்றத்துக்கும் அதிஷ்டானமும் எல்லாவற்றிற்கும் காரணமுமான பிரமமே யானென்று தெளிந்தபிட்டைகூடினவனே அநந்தகோடி ஜன்மபுண்ணிய பரிபாகப் பயனைப்பெற்ற பரமபுருஷனென்று வேதாந்தம் விபக்ஷ யாவன் பரமஹம்ஸன் என்றகேள்விக்கு விடையாய் இறுதியில் பரமஹம்ஸதருமத்தில் தமக்குள்ள ஆதரவை அதனை இருமுறை கூறியதாற்காட்

டிஉலகெலாம் படைத்தருளும் ஆசிரியர் உயர்பரமேட்டியார் தனது அருமைப்புதல்வனான நாரதனுக்கு இவ்வுண்மையை உபதேசித்தருளினார் என்பது ஓர் சிறிது. சுபம்.

இங்ஙனம் கவுணிபகுலப்பாலாழிக்குக் கவுத்துவ மணியாய்த்தோன்றி, ஸ்ரீமேதாதெக்ஷிணாமூர்த்தி கருணாகடாக்ஷத்தாற் சகலகலைகளுமோதியுணர்ந்து மிச்சிரமண்டலத்திற்றமது விஜயப்பிரதாபநிலைபெற நாட்டிய மஹாதேவதீட்சிதர் வம்சத்திலகராய வையாகரண ஸார்வபௌம ஸ்ரீ ராமஸ்வாமிதீக்ஷிதர் செல்வக்குமாரரும், ஸ்ரீஸீதாம்பா கர்ப்பசுத்தி முத்தமோத்தவரும், ஸ்ரீமத் பாரத்வாஜகுலஜலதிக்குக் கவுத்துவமணியாய் அத்வைதவித்தியாசாரியராய், நூற்றுநாலுகிரந்தங்களை நிர்வகித்தருளிய ஸ்ரீமது அப்பையதீக்ஷிதேந்திரர் வம்சத்தில் அவதரித்த ஷட்சாஸ்திரவல்லப பாரமேசுவர உபநிஷத் மார்க்கப்பிரவர்த்தக ஸ்ரீமஹாமஹோபாத்தியாய ஸ்ரீமது தியாகராஜகுருபுங்கவர் சரணஸேவாபராயணரும், பிரத்யக் பரசிவநிஷ்டாதுரந்தர பரசாம்பவ பாதபத்மரேணுசேவனத்திலன்புகந்துள்ளவரும் "ப்ரம்மவித்தியா" பத்திராதிபருமான பரசமய பஞ்சானன பாஞ்சஜன்ய பண்டிதஸ்ரீமத் ஸ்ரீநிவாஸ மநிபுங்கவர் வடமொழியிலிருந்து தென்மொழியிலியற்றிய பரமஹம்ஸோபநிடத ஹம்ஸத்தொனி முற்றிற்று.

---

னாலும் அவனுக்குச் சுகதுக்கங்கள் ஏதும் இலையா மென்பதும் அவன் சர்வகாமசன்னியாசியாதலால் எங்கும் "உதாசீனனாய்" பற்றற்றவனாய்நிற்றலே பரமஹம்ஸனுக்கு லக்ஷணமென்பதும், இஃது தள்ளற்பாலது இஃது கொள்ளற்பாலது என்ற வியவஸ்தை அவனுக்கு இன்மையால் அவன் நித்தியாநந்த சுவரூபனேயாமெ ன்பதும் இதன் கருத்தாம்.

## அவதரணிகை

இனி எல்லாப் பிரபஞ்சங்களுமொழிந்த விடம் பரமஹம் ஸனுக்குப் பரமானந்தாத்வைதம் சித்திக்கு மென்பதை நிரூபிப்பாரா ய் உபசங்கரிக்கின்றார்.

ஸவெ௵ஷாமிஜி யாணாம் மதிர வாவெ௭ா
யகூ தூவெ நாவா வஷீயவெ க
தநணா நவெஷிகவொஸ
தவூ வெஷூஷா ஸ்ஷ்வீக் ாகவூவெ தாூஷவதி
கூாகூவெதாூஷவதீதா வநிஷக ‖

(இ—ள்) எல்லா இந்திரியங்களுக்கும் கெதி ஒடுக்க மே. ஆத்மாமாத்திரத்தில் நிற்பது எதுவோ அதுவே, பூரணா நந்தபோதம் அந்த பிரமஞானே என்று; கிருதகிருத்தியனா வான் கிருத கிருத்தியனாவான் என்பது உபநிஷத்து

(வி—ரை) "எல்லா இந்திரியங்களுக்கும்" கெர்ப்பத்தின் கண் ஒடுக்கம் உண்டாகுமோ அவ்வதிட்டானமே ஆநந்தாத்மரூ பமாதலால் அதன் மாத்திரையாய் ரஜ்ஜுவினிடத்துப் பாம்பைப் போல உலகம் ஒடுங்குங்கால் எஞ்சியதே முக்தசுவரூபமாம். ஆ தலாற்றான் எவ்வித தோற்றத்துக்கும் அதிஷ்டானமும் எல்லாவ ற்றிற்கும் காரணமுமான பிரமமே யானென்று தெளிந்துவிட்டை கூடினவனே அநந்தகோடி ஜன்மபுண்ணிய பரிபாகப் பயனைப்பெ ற்ற பரமபுருஷனென்று வேதாந்தம் விடுக்கு யாவன் பரமஹம் ஸன் என்றகேள்விக்குரியவிடையாய் இறுதியில் பரமஹம்ஸதரு மத்தில் தமக்குள்ள ஆதரவை அதனை இருமுறை கூறியதாற்காட்

டி உலகெலாம் படைத்தருளும் ஆசிரியர் உயர்பரமேட்டியார் தனது அருமைப்புதல்வனான நாரதனுக்கு இவ்வுண்மையை உபதேசித்தருளினார் என்பது ஓர் சிறிது. சுபம்.

இங்ஙனங் கவுணியகுலப்பாலாழிக்குக் கவுத்துவ மணியாய்த்தோன்றி, ஸ்ரீமேதாதெக்ஷிணாமூர்த்தி கருணாகடாக்ஷத்தாற் சகலகலைகளுமோதியுணர்ந்து மிச்சிரமண்டலத்திற்றமது விஜயப்பிரதாபநிலைபெற நாட்டிய மஹாதேவதீட்சிதர் வம்சத்திலகராய வையாகரண ஸார்வபௌம ஸ்ரீ ராமஸ்வாமிதீக்ஷிதர் செல்வக்குமாரரும், ஸ்ரீஸீதாம்பா கர்ப்பசுத்தி முத்தமோத்தவரும், ஸ்ரீமத் பாரத்வாஜகுலஜலதிக்குக் கவுத்துவமணியாய் அத்வைதவித்தியாசாரியராய், நூற்றுநாலு கிரந்தங்களை நிர்வகித்தருளிய ஸ்ரீமது அப்பையதீக்ஷிதேந்திரர் வம்சத்தில் அவதரித்த ஷட்சாஸ்திரவல்லப பாரமேசுவர உபநிஷன் மார்க்கப் பிரவர்த்தக ஸ்ரீமஹாமஹோபாத்தியாய

ஸ்ரீமது தியாகராஜகுருபுங்கவர் சரணசேவாபராயணரும்,
பிரத்யக் பரசிவநிஷ்டா துரந்தர பரசாம்பவ பாதபத்ம
ரேணுசேவனத்திலன்புகந்துள்ளவரும்
"ப்ரம்மவித்தியா" பத்திராதிபருமான
பரசமய பஞ்சானன பாஞ்சஜன்ய
பண்டித ஸ்ரீமத் ஸ்ரீநிவாஸமகிபுங்கவர்
வடமொழியிலிருந்து
தென்மொழியிலியற்றிய
பரமஹம்ஸோபநிடத
ஹம்ஸத்தொனி
முற்றிற்று.

---

## பரமஹம்ஸோபநிடததாத்பரியசங்கிரகம்

---

இவ்வுபநிடதமானது அத்வைதிகளுக்கு மிகச்சாதகமென்பதைப்பற்றி யாம் விரிவாய் எடுத்துரைக்கவேண்டுவதுயாதுமில்லையாயினும், சுலபமாய் அதனை அறிந்துகொள்வதற்கு சில ஏதுக்களை எடுத்து நிரூபிப்பாம்.

(I) அறுவகைக்குறிப்புகள் வருமாறு:—உபக்கிரமம் நித்யபோதஸ்வரூபேணாவஸ்திதி: தம்ஹோவாச... ஸ்திதி: ॥ என்பது

(உ) உபசம்ஹாரம்=தத்ப்ரஹ்மைவாஹமஸ்மீதி ॥ எ-து

(௩) அப்பியாசம்=ஶ்ருத்வா... ॥ என்பதிற்பல

(ச) அபூர்வதை= ஸம்ஶயவிபர்யயரஹிதப்ரஜ்ஞாநம் என்று அநிர்வசனீயாவித்யாஸ்வரூபத்தை உண்மையறிவு, அறிவின்மை, திரிபுணர்ச்சி, ஐயம், இவற்றினும் வேறாய் ஓர் அறிவு சர்வப்பிரபஞ்ச மூலகாரணமாயுள்ளதென்பதூஉம் அதனொழிவதே மோக்ஷமென்பதூஉம் அஃதே பரமஹம்ஸரடையவேண்டிய பெரும்பேறென்பதூஉம் வேறு பிரமாணங்களால் கிடைக்காத உண்மையாதலால் இவ்விடத்தவ்வபூர்வதையுமமைந்தமை காண்க-

(ரு) பலம்—க்ருதக்ருத்யோ பவதி என்று இவ்வழிவழிப்பட்டவுயர் துறவியை மிகவும் பற்ற ஆனந்தத்திற்குரியவனென்றமையால் மோக்ஷமே இவ்வித்தையின் பயனாயிற்று.

(சா) அர்த்தவாதம் பிரமதேவ நாரத சம்வாதம்முதலி யனவும் ஸிக்ஷாஸோதே ணயோஜீவெஸ என்று தொடங்கிய பலஸ்க்தார்த்தவாதங்களும் அவ்வகையில் சேர்க்கப்பாலனவாம்

[எ] உபபத்திகள் யஷுக்ஷம் கஷ்டஊ ஊ ெய வகிஷு தெகஷூக்ஷஊ்வ கவஹீவஷூவாவஷீபதெ | யதஷுஅவ ஈவயூஷூ் என்பதாதிபலவாம்-

மேற்கண்டபடி உபக்கிரமோபசங்காரங்களே வேறுப டித்தமையால் எழுவகையாயினும் உண்மையல அறுவகை யேயுள்ள குறியீடுகளால் உத்தமமாயமைந்த அத்வைதசா ஸ்திரமாயஇவ்வுபநிடதம் கூர்மபுராணம் வகுத்தருளியவாறு பௌதிகன், சாங்க்யன், அத்யாச்சிரமியென்ற மூவகை யோகிகளுள் மிகவும் சிறந்த பரமஹம்ஸயோகிக்கு இன்றிய மையாததாகவே இதனைப்பரமஹம்ஸோபநிடதமென்றது வா ய்மையாம். சன்னியாசிகளுக்குறிய பல ரகசியதருமங்கள் இதனிடத்தமைந்தமையால் இதனைப் பல யதீசுவரர்கள் வி சேஷமாய்ப்பாராயணஞ் செய்வதுண்டு- இவ்வுபநிடதத்திற் கும் அத்வைதிகளல்லாத ஏனையவர்க்கும் எவ்வகையிலும் ச ம்பந்தமின்மையால் இதனை மற்றவர் எடுக்கவும் வழங்கவும் உறிமை கொண்டாடவும் இயலாதென்க, இவ்வளவு தெளி வாய் அத்வைதசாஸ்திரமாய் இவ்வுபநிடதமிருப்பினும் எம் முறைப்படி இதற்குமொரு தாத்பரியசங்கிரகம் இயற்றினோ மென்க-

பரமஹம்ஸோபநிடததாத்பரியசங்கிரகம்

முற்றிற்று.

# பரமஹம்ஸோபநிடத அரும்பதவிளக்கம்

𑌅𑌦𑍍𑌵𑍈𑌤𑌂 = ஐக்யம்,

𑌅𑌨𑌿𑌕𑍇𑌤𑌃 = ஓரிடமில்லாதவன்

𑌅𑌵𑍍𑌯𑌕𑍍𑌤𑌂 = துலைந்தது

𑌅𑌵𑍍𑌯𑌯𑌕𑌂 = வேறல்ல

𑌅𑌸𑌙𑍍𑌗𑌃 = பற்றின்மை

𑌅𑌯𑌃 = சுபத்துக்கேதுவானவிதி

𑌅𑌲𑌕𑍍𑌷𑌣𑌂 = எவ்விதவிலக்கணமுமற்றது

𑌅𑌵𑌲𑍋𑌕𑌨𑌂 = விசேஷப்பார்வை

𑌅𑌂𑌹𑌃 = பாவம்

𑌅𑌸𑍂𑌯𑌾 = மற்றயப்பொருள்களில்பொறுமை

𑌅𑌸𑍍𑌤𑌿 = ஸத்தாமாத்திரம்

𑌅𑌹𑌂𑌕𑌾𑌰𑌃 = ஜீவோபாதி

𑌅𑌨𑍍𑌤𑌰𑌂 = வேற்றுமை

𑌆𑌚𑍍𑌛𑌾𑌦𑌨𑌂 = போர்வை

𑌆𑌤𑍍𑌮𑌾 = ஜீவன் சேதனன்

𑌆𑌤𑍍𑌮𑌹𑌾 = தன்னைக்கொன்றவன்

𑌆𑌵𑌾𑌹𑌨𑌂 = ஓர்வஸ்துவை மற்றொன்றில் வந்ததாக பாவித்தல்

𑌆𑌶𑌾𑌮𑍍𑌬𑌰𑌃 = வஸ்திரமில்லாதவன்

𑌇𑌚𑍍𑌛𑌾 = ஒருபொருளிடம் விருப்பம்

𑌉𑌦𑍍𑌵𑌿𑌗𑍍𑌨𑌃 = பயந்தவன்

𑌉𑌪𑌰𑌮𑌃 = ஒடுக்கம்

𑌉𑌪𑌾𑌸𑌨𑌂 = வழிபாடு

𑌏𑌕𑌤𑍍𑌵𑌂 = ஒற்றுமை

𑌏𑌕𑌦𑌣𑍍𑌡𑍀 = ஓர் தண்டமுடையவன் முக்கியமான தண்[illegible]டையவன்

## பரமஹம்ஸோபநிடத அரும்பதவிளக்கம் உள்

க்ருதக்ருத்யஃ = கிருதார்த்தன் செய்யவேண்டியதைச்செய்தவன்-

காமஃ = காதல்பெண்ணாசை

குணபஃ = பிணம்

க்ரோதஃ = கோபம்

கௌபீநம் = கோவணம்

கதிஃ = ஒடுங்குமிடம்

கர்வஃ = இறுமாப்பு

க்ராஹ்யம் = ஏற்றல்

ஜ்ஞாநம் = அறிவு

ஜ்ஞாநதண்டஃ = அறிவாகியதண்டம்

ஜ்ஞாநவர்ஜிதஃ = அறிவில்லாதவன்

திதிக்ஷா = பொறுமை

த்யாகஃ = விடுதல்

த்வம் = நீ முன்னிலைப் பொருள்

தண்டஃ = தண்டு

தர்பஃ = கொழுப்பு

தம்பஃ = ஆடம்பரம்

த்ருஷ்டம் = காண்டல்

த்வேஷஃ = வெறுப்பு.

த்யாநம் = தியானித்தல்

நநமஸ்காரஃ = நமஸ்காரம் என்றவணக்கமின்மை யுடையோன்

நரகாஃ = நரகங்கள்

நஸ்வதாகாரஃ = பிதுருகாரியமில்லாதவன்

நஸ்வாஹாகாரஃ = தேவகாரியமில்லாதவன்

நாரதஃ = தேவரிஷிகளில் ஒருவர்

நித்யவநஸ்த: = என்னும்பர்வனத்துள்ளவன்
நித்யபோத: = என்னும் அறிவுடையவன்.
நிந்தாஸ்துதீ = நிந்தையும்தோத்திரமும்
நிஸ்ஸங்க: = பற்றற்றவன்
பரமாத்மா = ஈசுவரன்
பரமபதம் = மேலானபதவி
ப்ருதக் = வேறு
பௌல்கஸ: = சண்டாளனுக்குமேலானசங்கரம்
ப்ரஹ்மஹா = பிரமஹத்திக்காரன்
பாதகம் = கெடுதி
பிக்ஷாடனம் = பிச்சைவாங்குதலே.
பிக்ஷு: = பிச்சைக்காரன் ஸன்னியாஸி-
பேத: = வேற்றுமை-
மாத்ஸர்யம் = மாச்சரியம்.
மந்த்ரம் = மந்திரம் ஆலோசனை.
மஹாபுருஷ: = புருடரில்சிறந்தவன்.
மஹாரௌரவம் = ஓர்பெருநரகம்
மார்க்க: = ஸம்பிரதாயம்.
மித்யாஜ்ஞானம் = மிச்சையறிவு.
மோததே = களிப்பான்.
மோஹம் = மயக்கம்.
யதிவ்ருத்திஹா = எதிகளின்விருத்தியைக்கெடுப்பவன்-
யாத்ருச்சிக: = கிடைத்ததைக்கொண்டுகளிப்பவன்
யோகின: = யோகிகள் ஸன்னியாஸிகள்
ராக: = இச்சை ஆன்மா
ராம: = விருப்பம்.
லக்ஷ்யம் = குறிக்கத்தக்கது

லோசநம் = பார்வைக்கேதுவான புலன்கள்

லோப: = பொருளாசை

வபு: = சரீரம்.

[illegible] = துலையும்.

விபர்யயம் = திரிபுணர்ச்சி.

விஸர்ஜநம் = விடுதல் பூஜையின் ஓர் உபசாரம்.

வேதபுருஷ: = வேதங்களில்சொல்லப்பட்டபுருஷன்

வைராக்யம் = துறவு

ஶமாதி: = சமம்முதலியன

ஶுபம் = புண்யம்

ஷடூர்மய: = அறுவகையலைகள் அறுவகைச்சரீராவஸ்தை

ஸ: = அவன் படர்க்கைப்பொருள்

ஸந்த்யா = ஸந்தி

ஸர்வாஶீ = எல்லாவற்றையுந்தின்பான்.

ஸர்வம் = எல்லாம்

ஸம்ஶய: = ஐயம்

ஸ்பர்ஶம் = தொடுதல்

ஸ்திதி: — இருப்பு

ஸ்திரபுத்தி: = நிலையானபுத்தி

ஹர்ஷ: — களிப்பு

பரமஹம்ஸோபநிடத வரும்பதவிளக்கம்

முற்றிற்று.

---

# பரமஹம்ஸோபநிஷத் வசநாநுக்ரமணிகா |

—— ஃ(०)ஃ ——

| வசநம் | ப்ருஷ்டம் | பங்க்தி: |
|---|---|---|
| அதயோகிநாம் | க | கூ |
| அஸௌஸ்வபுத்ரமித்ர | ச | ரு |
| ஆஶாம்பர: | கசா | சா |
| இதமந்தரம்ஜ்ஞாத்வா | கரு | உங |
| காஷ்டதண்டோத்ருத: | கச | உங |
| தச்சநமுக்யோஸ்தி | ரு | உசா |
| தம்பகவாநாஹ | உ | உச |
| நாவாஹநம் | கசா | உஎ |
| பிக்ஷாமாத்ரேண | கரு | க |
| யதஸ்தத்வபுரபத்வஸ்தம் | கஅ | ரு |
| யஸ்மாத்ஸ்ருஷ்டா: | ககூ | ஙய |
| ஸர்வாந்காமாந் | கச | அ |
| ஸர்வேகாமா: | உக | கசா |
| ஸர்வேஷாமிந்த்ரியாணாம் | உஉ | கக |
| ஸௌவர்ணாதீநாம் | கஅ | உஅ |

பரமஹம்ஸோபநிஷத்வசநாநுக்ரமணிகா
ஸமாப்தா |

———

# பரமஹம்ஸோபநிடத விஷயானுக்ரமணி

# பரமஹம்ஸோபநிடதப்பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 2 | 6 | வினவினின் | வினவினனெனின் |
| ,, | 10 | உண்மைகுறிக்கும் | உண்மையைக்குறிக்கும் |
| 8 | 4 | பெரும்துயர் | பெருந்துயர |
| 8 | 6 | விடுவெத்தாளுல் | விடுபெத்தாளுல் |
| 8 | 21 | யெடுத்துசகூறியது | யெடுத்தது, கூறியது |
| 8 | 22 | க்கூறியது | கூறியது |
| 10 | 17 | ஜாநகூத | ஜாநச்த |
| 10 | 21 | வகுத்தோதற்கேயாவது | வகுத்தோதற்கியையாது |
| 10 | 26 | யென்பனவாம் | யென்பார் |
| 10 | 28 | சம்வார | சம்ஸார |
| ,, | 29 | வகித்து | வகித்தார் |
| 11 | 18 | எது | என்றது |
| 12 | 20 | உண்மையில் | இன்மையில் |
| 12 | 24 | முதலியவை | முதலியவையும் |
| 13 | 12 | ஜாதியம் | ஜாதியம் |
| 14 | 1 | துலையாமொழி | துலையாதுழி |
| 16 | 15 | பிதுர்கர்மா | பிதுர்கர்மம் |
| 18 | 2 | போதிக்க | பாதிக்க |
| 18 | 22 | அங்ஙனம் | இங்ஙனம் |
| 19 | 13 | களுக்கு | எங்களுக்கு |
| 22 | 7 | கெர்ப்பத்தின் | எத்தின் |
| 24 | 17 | பௌன | பெறென |